27th September 1961]

(உ) The Headmaster concerned has been instructed by the Commissioner to avoid in future such delay in forwarding the Secondary School-Leaving Certificates for completion.

SRI A. GOVINDASAMY : சர்டிபிகேட்டுகள் காலங் கடந்து சென்றதன் விளைவாக மாணவர்கள் பாதிக்கப்பட்டார்களா ? அப்படி யானால், அந்த மாணவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சர்டிபிகேட்டுகள் ஜூன் 14-ந் தேதி வந்தன. அவை 15-ந் தேதி திருப்பி அனுப்பப்பட்டுவிட்டன. மாணவர்கள் பாதிக்கப்பட்டதாக எனக்குத் தகவல் ஒன்றும் இல்லை.

*Allotment of Teachers to District Boards*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of Question No. 1869, is not in his seat, the question and answer will be printed in the proceedings.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, it is an important question.

DEPUTY SPEAKER : It may be an important question but the hon. Member should have risen earlier and put the question on his behalf, when I called that question.

* 1869 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1958–59, 1959–60-ல் நமது ராஜ்யத்தில் உள்ள ஒவ்வொரு ஜில்லா போர்டுக்கும் எத்தனை ஆசிரியர்கள் நியமித்துக்கொள்ள அனுமதி கொடுக்கப்பட்டது ?

(இ) எந்த ஜில்லா போர்டு இதைப் பூரணமாக பயன்படுத்திக்கொள்ள வில்லை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) & (இ) A statement[a] is laid on the table of the House.

*All-India Industrial and Commercial Exhibition*

* 1870 *Q.*—SRI V. SUBBIAH : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சென்னையில் நடந்த அகில இந்திய வர்த்தகப் பொருட்காட்சி சம்பந்தமாக சென்னை சர்க்காருக்கு ஏற்பட்ட செலவு எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொருட்காட்சியை ஒட்டி சுமார் இரண்டே முக்கால் லட்ச ரூபாய் செலவாயிற்று.

SRI V. SUBBIAH : நமது அரசாங்கம் எடுத்துக்கொண்ட சில பகுதிகளில் எவ்வளவு செலவானது என்று தனித்தனியாக முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்தப் புள்ளி விவரம் இப் பொழுது என்னிடம் இல்லை.

---

[a] Printed as Appendix III on 187 infra.